# திருநெல்லை

ஓம்

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி – வைகாசி– 2017 – மே



14.05.2017 அன்று கோவிலூர் மடாலயத்திற்கு எழுந்தருளிய சிருங்கேரி ஜகத்குரு சங்கராச்சாரியார் ஸ்ரீஸ்ரீ பாரதீ தீர்த்த மகா சந்நிதானம் மற்றும் ஜகத்குரு ஸ்ரீஸ்ரீ விதுசேகர பாரதீ சந்நிதானம் ஆகியோருடன் கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - வைகாசி - 2017 - மே இதழ் - 59

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

## நலமெல்லாம் சூழ்க !

மாசற்ற கோவிலூர் மங்கை - திரு
மாலுக்குப் பின்வந்த தங்கை
பாலன்ன மொழியாளைப் பார்ப்பீர் - அவள்
பாதத்தில் இருகையைச் சேர்ப்பீர்
வேலன்ன விழிமாதைக் காண்பீர் - சிவன்
விரும்புமிரு தோளிலணி பூண்பீர்
தேவாரம் கேட்கின்ற காது - அதில்
தினந்தோறும் தேன்தமிழை ஓது

கொற்றவாள் ஈசருடன் கூடி - அவள்
கொடுப்பாளே பக்தருக்குக் கோடி
கோதிலறம் வளர்க்கின்ற ஊரைப் - பாரும்
கொண்டாடும் விழாவினது சீரை
ஆடியிலே இவளுடைய தேரு - அது
ஆடியே ஓடுவதைப் பாரு
தேனாறு பாய்கின்ற ஊரு - அதன்
தேவியாம் திருநெல்லை பாரு




பாண்டியனார் கட்டிவைத்த கோயில் -அங்கே
பரந்திருக்கும் கோபுரத்தின் வாயில்
பண்புள்ள வேதமுனி யானோர் - பலர்
படிப்பதனைப் பார்க்கின்ற வானோர்
வன்னிவனம் என்றிதனைச் சொல்வார் - நெல்லை
வாசலிலே வந்துவினை வெல்வார்
கன்னியிவள் ஆடுகிற ஊசல் - வந்து
காணலாம் கோயில்மணி வாசல்

ஆண்டவரும் வழிபட்ட நாளில் - பக்தி
அதுமீறி விழுந்தாரே தாளில்
வன்னிவனம் கோவிலூர் ஆகச் - செய்து
வழிபட்டார் மக்கள்பல ராக
வானுலவு தேவர்களும் வந்தார் - அவர்
வகைவகையாய்ப் பூக்கொண்டு தந்தார்
அழகான திருநெல்லை வாழ்க ! - அவள்
அருளாலே நலமெல்லாம் சூழ்க !

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர் .நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

இந்த மே மாதம் நம்முடைய திருமடத்தின் மிக முக்கிய நிகழ்வுகள் நடைபெற்றன. நடைபெற இருக்கின்றன. 14, 15 ஆம் தேதிகளில் நம்முடைய குரு பீடமான சிருங்கேரி சாரதா பீட பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீஸ்ரீ பாரதீ தீர்த்த மகா சுவாமிகள், அவர்களால் தேர்ந்தெடுக்கப் பட்டுப் பக்குவப் படுத்தப்படுகிற சந்நிதானம் ஸ்ரீஸ்ரீ விதுர சேகர பாரதீ அவர்களுடன் நம்முடைய திருமடத்திற்கு வருகை புரிந்து திருமடத்தையும், பக்தர்களையும் மனதார ஆசீர்வதித்தார்கள். வருகின்ற 27, 28 தேதிகளில் சேக்கிழார் விழா முதல் ஆண்டு நிகழ்வாகவும், 29 ஆம் தேதி குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப சுவாமிகளின் 95 ஆவது பிறந்த நாள் விழாவும் நடைபெறவிருக்கின்றன.

சிருங்கேரி சங்கராச்சாரியார் அவர்கள் வருகை 30 ஆண்டுகளுக்குப் பிறகு நிகழ்ந்திருக்கிறது. இதற்கு முன்னர் 1908, 1910, 1925, 1980, 1987 ஆகிய வருடங்களில் இதுவரை ஐந்து முறை விஜயம் செய்திருக்கிறார்கள். இது நம்முடைய திருமடத்திற்குக் கிடைத்த மிகப் பெரிய பாக்கியமாகும்.

அவருடைய ஆசியுரையிலே நம்முடைய நல்வாழ்விற்கு ஆன்மீகமே உகந்தவழி. எல்லாராலும் இறைவன் நாமத்தைத் தொடர்ந்து ஜபிக்க முடியும். முடிந்தவர்கள் கோவிலுக்குச் சென்று இறைவனைப் பக்தியோடு வணங்கலாம், தர்மங்களைச் செய்யலாம். செயல்களிலே பெரிது, சிறியது என்ற பாகுபாடு கிடையாது. நாம் பக்தியோடும், தெளிவோடும் இறைவன் நாமம் சொல்லிச் சிந்தித்து இயன்ற தொண்டினைச் செய்து வரலாம். அப்படிச் செய்பவர்களுக்கு இறைவனுடைய அருள் நிச்சயமாகக் கிட்டும் என்று கூறினார்கள்.

வைணவ சம்பிரதாயத்திலே பக்தர்களில் பெரியவர், சிறியவர் எனும் பாகுபாடு செய்யக் கூடாது என்பது மரபு. பக்தர்களில் ஏற்றத் தாழ்வு கிடையாது. அதே போல யாவரும் இறைவனுக்கும், சமுதாயத்திற்கும் தங்களால் இயன்றதைச் செய்வது அவர்கள் கடமையாகும். பாரதி சொல்வது போல செல்வந்தர்கள் பொற்குவியல் தாரீர். முடியாதவர் காசுகள் தாரீர். அதுவும் முடியாதவர்கள் உடல் உழைப்பைத் தாரீர், எதுவுமே இயலாதவர்கள் இனிய சொற்களைத் தரலாம். எவ்வகையிலும் சமுதாயத்திற்கும், நற்பணிகளுக்கும் மக்கள் பங்களிப்பு மிகமிக அவசியம். நேரத்தை வீணாக்காமல் செயல்பட்டுத் தனக்கும், குடும்பத்திற்கும், சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் நல்ல பயனுள்ள பங்களிப்பைத் தர வேண்டும். உள்ளத்தில் உண்மை இருக்குமானால் நம் ஒழுக்கத்திற்குக் குறைவு வராது. தனிமனித ஒழுக்கமே சமுதாயத்தை நல்ல செழிப்பாக்க முடியும். எல்லோரும் முயலுவோமாக!

**ஆசீர்வாதங்கள்!**
**ஸ்ரீ சற்குருநாதன் துணை**

# பட்டினத்தார் பைந்தமிழ் - 7

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

சைவத் திருமுறைகள் யாவும் தோத்திரங்களாகும். எனினும் அவற்றுள் ஊடுபயிராகக் காணப்படுபவை சாத்திர உண்மைகளாகும். மோரில் வெண்ணெய் இயல்பாய்ப் படிவது போலத் தோத்திர சாத்திர உணர்வுகளுடன் அமைந்தவை திருமுறைகள்.

கி.பி. 12 ஆம் நூற்றாண்டு ஈறாக உள்ள காலம் வரை திருமுறைக் காலம். பின்னரே மெய்கண்ட சாத்திரங்கள் தோன்றுகின்றன. அந்நிலையில் திருமுறைத் தோற்றக் காலத்திற்கு உட்பட்ட பட்டினத்தடிகளின் தோத்திரத்தில் காணும் சாத்திரப் பதிவு பங்களிப்பை இக்கட்டுரையில் காணலாம்.

ஆளெனப் புதிதின் வந்து அடைந்திலம் எனத் தொடங்கி அம்பலத் தாடும் உம்பர் நாயகனே என்பது வரையான 34 வரிகொண்ட 24 ஆம் பாடல் சித்தாந்தப் பிழிவை உணர்வதாக உள்ளது.

மிக எளிமையாய்த் தில்லையில் யாவரும்காண நடம்புரியும் ஐயனே! பல்வேறு நிலையில் காணும் பண்பினனாய் உள்ள உன்னைச் சிந்தித்துத் தொழும் நான், புறம் போகாமல் இருக்க அருள் செய் என வேண்டுவதே 24ஆம் பாடலின் பொருட்சுருக்கம்.

இதில் பல்வேறு சாத்திர உண்மைகளைப் பட்டினத்தார் பதிவு செய்கிறார். ஆன்ம தத்துவம் இறைத் தத்துவம் உலகியல் தத்துவங்கள் யாவும் பொன்னாய் உருகிடும் வார்ப்பாக இப்பாடல் பாடப்பட்டுள்ளது.

ஆளெனப் புதிதின் வந்து அடைந்திலம் என்ற தொடக்கம் ஆன்மா தன்னை யாரெனக் காட்டிக் கொள்வதாக உள்ளது. என்று நீ அன்று நான் என்பதாகக் கூறும் ஆன்மீக விசாரணையாகப் பதி பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையைப் பட்டினத்தார் நினைவு கூர்கிறார்.

*பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்*
*பதியினைப் போல் பசுபாசம் அனாதி*

எனத் திருமூலர் முப்பொருள் உண்மையை உணர்த்தினார். அதற்கேற்ப ஆன்மாவின் தோற்றமும் அனாதி என்பதால் ஆளெனப் புதிதாக வந்தவன் இல்லை என்றார் பட்டினத்தார். மாதொரு பாகனார்க்கு வழிவழி அடிமை என்பது சேக்கிழார் வாக்கு! அத்தா உனக்கு ஆளாயினேன், அல்லேன் எனலாமோ? என்கிறார் சுந்தரர்.

அடுத்து மொழிவது உன் ஐந்தெழுத்து, நாநவிற்றும் காதலேம் என்கிறார் அடிகள். இறைவனைக் காட்டினும் அவன் திருநாமம் சிறந்தது. துஞ்சலும் துஞ்சல் இல்லாத போழ்தும் ஐந்தெழுத்தையே நெஞ்சம் நினைக்கும் எனத் திருஞான சம்பந்தர் கூறுவது போல அடிகள் அஞ்செழுத்து மந்திரத்தைக் காதலித்து ஓதுவதாகக் கூறுவது சைவ சமயச்சாரமாகும். உருஏறத் திருஏறும் என்பது நாட்டுப்புற வழக்கு.

ஆன்மாவானது ஆண்டவனைப் போல அனாதிப் பொருள் எனக் கூறியவர், அது இறைத்திரு நாம உச்சரிப்பால் உய்திபெறும் என்றதற்கும் மேலாக வினைகெடக் கேட்பது நின்பெரும் கீர்த்தி - என்றது சித்தாந்த உண்மையை உணர்த்தும் உபதேசச் சிறப்பைக் குறிப்பதாகும். கற்றல் கேட்டல் உடையார் பெரியார் என ஞானசம்பந்தர் கூறியதற்கேற்ப இறைத் திருநாமத்தைக் கற்று ஓதிய ஆன்மா, இறை உபதேசமாகக் கேட்கும் போது அதற்கான பலன், வினைகெடல் எனப் பட்டினத்தார் கூறுவது சைவ சித்தாந்த சாரமாகும்.

இப்படிப் படிப்படியே பக்குவப்படும் நிலையில் தான் ஐம்புல அடக்கம் வரும் என்ற உண்மையைக் கூறுகையில் மீட்பது நன்னெறியல்லாப் புன்னெறி படர்ந்த மதியில் நெஞ்சத்தை என்கிறார் பட்டினத்தார். மனம் ஐம்புலன்களை அலைக்கழிப்பதால் அதைக் கட்டுப்படுத்தி நன்னெறியில் படரச் செய்வதையே பட்டினத்தை மீட்பது என்றார்.

இப்படியாக மனம் பக்குவப்பட்டு விட்ட நிலையில் இறை வழிபாட்டை மேற்கொள்ள வேண்டும் என்பது சைவத்தின் பால பாடமாகும். சரியை, கிரியை என்ற படிநிலையில் பூசை செய்து

அருச்சித்து வழிபாடு செய்ய வேண்டும். அதைத்தான் வரைந்து நிதிஎன அருத்தி செய்திடுவது உருத்திர சாதனம் என்கிறார் அடிகள். செல்வன் கழல் ஏத்துதலே செல்வம் எனத் திருஞான சம்பந்தர் கூறியதற்கேற்ப ஆன்மாவிற்கென வரையறுத்த செல்வம்(நிதி), அருச்சித்து வழிபாடு செய்வதாகும் என்பது பட்டினத்தார் கருத்து. அத்தகு பூசைக்குரிய செய்கைக்குத் திருநீறணிதல், உருத்திராக்கம் தரித்தல் போன்ற சாதனங்களைத் தவறாமல் மேற்கொள்ள வேண்டும்.

ஆக சரியை, கிரியை என்ற சாத்திரக்கடன்களை ஆன்மா முதலில் மேற்கொள்ளப் பழகவேண்டும் என்பது பாடலின் கருத்தாகும். இங்ஙனம் மேற்கொள்ளும் பக்குவத்தில் இறைத் தத்துவம் புரியும் என்பதன் உண்மையைப் பாடலின் இறுதிப் பகுதி உணர்த்துகிறது.

கடலில் எண்ணற்ற அலைகள் தோன்றிக் கடலிலேயே அடங்குதல் போல் உலகத் தோற்றமும் ஒடுக்கமும் தனி முதலான பரம்பொருளிடத்தே நிகழ்கின்றனவாம். இதனைப் பட்டினத்தார், சித்தாந்த நுட்பத்துடன் விளக்குகிறார்.

*நுரையும் திரையும் நொப்புறு கொட்பும்*
*வரையில் சீகர வாரியும் குரைகடற்*
*பெருத்தும் சிறுத்தும் பிறங்குவ தோன்றி*
*எண்ணில வாகி யிருங்கடல் அடங்கும்*
*தன்மை போலச் சராசரம் அனைத்தும்*
*நின்னிடைத் தோன்றி நின்னிடை யடங்கும் நீ*
*ஒன்றினும் தோன்றாய் ஒன்றினும் அடங்காய்*

உலகம் இறைவனிடம் தோன்றி அவனிடமே ஒடுங்குமாயினும் அந்த உண்மையை ஆதார ஆதேய நிலையில் உணர வேண்டும் என்ற திருமூலர் தத்துவத்தின்படி காண வேண்டும் என்பது தான் பட்டினத்தார் கண்ட மெய்ப்பொருள் கருத்து.

தரைமீதுள்ள நாற் காலியில் நாம் உட்கார்ந்திருந்தாலும் அது, தரைமீதே உட்கார்ந்திருப்பது போன்றதாகும். தரை எல்லாவற்றிற்கும் ஆதாரம். அதன் ஆதேயமாக உள்ளது நாற்காலி, நாற்காலி

மீதிருப்பது உண்மை போன்றதே அன்றி அது (அந்நாற்காலி) தரைமீதிருப்பதால் தரைமீதிருப்பதாகவே உணரப்படும்.

அது போலத்தான் இறைவனுக்குக் கட்டுப்பட்ட மாயையால் உயிர்கள் தோன்றி, மறைந்தாலும் அது மாயைக்குரியது. அம்மாயை இறைவனுக்குள் அடக்கம் என்பதால் உபசார வழக்காக இறையிடம் தோன்றி இறையிடம் ஒடுங்குவதாகக் கூறுவது வழக்கமாகும்.

அதனால்தான் இறைத் தத்துவமாகப் பட்டினத்தார், ஒன்றினும் தோன்றாய், ஒன்றினும் அடங்காய் என்றார். ஆனால் மாயை இறைவனுள் அடக்கம் என்பதால் அதன் செய்பாடு (மாயையின் தோற்ற ஒடுக்கச் செயல்பாடு) இறைவனுக்குரிய தாகக் கருத்தின்றி மொழிவதாகச் சித்தாந்தத்தில் கூறுவர். இந்த நுட்பம் பட்டினத்தாரின் 24ஆம் பாடலின் சாரமாகப் பதிவாகியுள்ளது.

இதனை ஓர் இலக்கண எடுத்துக்காட்டால் உணரலாம். இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேல் ஏற்றிக் கூறுவதுபோல இடவாகுபெயராய் இச் சித்தாந்த உண்மையை உணரலாம்.

கிழங்கிலிருந்து தான் தாமரை முளைக்கிறது. ஆனால் அக்கிழங்கு உள்ள இடம் சேறு. கூறுவோர் சேற்றிலிருந்து தான் தாமரை தோன்றுவதாகக் கூறுமாறு பங்கஜம் என்பர், பங்கம் - சேறு, ஜம்-தோன்றுவது. ஆக சேற்றிலிருந்துதான் தாமரை முளைத்ததாகக் கூறும் கருத்தில்லா நிலைபோல, மாயையாகிய பொருளிலிருந்து தோன்றி அதிலேயே ஒடுங்குவதான உலகத்தை மாயைக்கு ஆதாரமாகிய முதல்வனிடம் தோன்றி ஒடுங்குவதாகக் கூறுதல் உலக வழக்காகிவிட்டது.

இந்த நுட்பத்தைத்தான் பட்டினத்தார், நீரில் தோன்றும் அலை நீரில் அடங்கினாலும், நீருக்கு இடமான கடலில் தோன்றி மறைவதாகக் கூறுதலை இறைத் தத்துவத்தோடு உணர்த்தியது அவரின் பரந்துபட்ட மெய்ப் பொருள் உண்மையை உணர்ந்து உணர்த்தும் பைந்தமிழ்ப் பயிற்சி எனலாம் என்க! என்னே பட்டினத்தாரின் ஓதாது உணர்ந்த ஒண்டமிழ் ஒட்பம்!

இப்படியெல்லாம் சித்தாந்த சொரூபமாக உள்ள அந்த இறைவன் தில்லையிலே அருள் நடனம் ஆடுகிறான். அவனை உயிர் உடம்பில் உள்ள காலத்திலேயே கண்டு தொழவேண்டும் என்று 24 ஆம் பாடலில் அறிவுரை கூறுகிறார். புலன் வழி போம் நெஞ்சமே! மன்றுக் கெல்லாம் அணியாய் அருள் நடம் ஆரும் பிரானை யடைந்துருகிப் பணியாய்! என்பது அடிகள் வாக்கு!

அடுத்து இறையருளைப் பெறமுடியாதவாறு தடுப்பதே புலன்களால் அலைக் கழிக்கப்படும் மனமே நீ என்பதால் கானல் நீர் போன்ற மாய வாழ்க்கையில் தூண்டில் கோக்கப்பட்ட புல்லிய இரைச் சுவைக்கு ஆசைப்பட்டு அழியும் மீன் போலவும் விளக்கில் விழும் விட்டிலைப் போலவும் பற்பல மாயங்களால் சிற்றின்பம் விரும்பித் துன்புறுகின்றாய் என்பதால் பசுவைநாடி ஓடும் கன்று போன்ற அடியார்களுக்கு அருள்செய்யும் தில்லைத் திருக் கூத்தனை உள்ளக் கசிவுடன் ஓதி வழிபடுவாயாக! என்கிறார் பட்டினத்தார். இதனால் அவர் பட்டுப் புழுவானது தன்வாயிலிருந்து வரும் நூலிழையால் மாய்வதைப் போல ஆசையாகிய சங்கிலிப் பாசத்தில் சிக்கி, பற்பல தாயின் கருப்பையில் பிறவி எடுக்கின்ற ஆன்மா, ஈடேற வழி கூறினார் என்பதை,

*நுண்ணூல் நூற்றுத் தன்னகப் படுக்கும்*
*அறிவில் கீடத்து நுந்துழி போல*
*ஆசைச் சங்கிலிப் பாசத் தொடர்ப்பட்டு*
*இடர்கெழு மனத்தினோடு இயற்றுவது அறியாது*
*குடர்கெழு சிறையறைக்கு உறங்குபு கிடத்தி*

என்ற வரிகளால் உணர்த்தினார். கூறும் மேற்படியான காரணங்களால் துன்பம் நீங்கிட, நடராசப் பெருமான் தரிசனத்தால் பிறவி இல்லை என 30ஆம் பாடலில் பட்டினத்தார் செம்பொன் அம்பலத்தே இடுக்கண் எல்லாம் அறுகின்றன என்றார்.

இனி அடிகள் கூறும் தில்லைக் கூத்தனின் அறக்கருணை மறக்கருணைகள் பற்றிக் கூறுவதை அவர்தம் பைந்தமிழ் எழுத்தால் உணர்வோமாக!

*(தொடரும்)...*

## திருக்குறள் தெளிவுரை
(ம. கார்மேகம்)

### வெஃகாமை
(பிறருடைய பொருளைக் கைப்படுத்திக் கொள்ள விரும்பாமை)

**1. நடுவுஇன்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்**
**குற்றமும் ஆங்கே தரும்.**

நடுவுஇன்றி - நடுவு நிலைமை இல்லாமல்; நன்பொருள் - ஒருவருக் குரிய நல்லபொருளை; வெஃகின் - விரும்பினால்; குடிபொன்றி-குடியை அழித்து; குற்றமும் - பல குற்றங்களையும் ; ஆங்கே தரும் - அப்பொழுதே தரும்.

நடுவு நிலை இல்லாமல் ஒருவருக்குரிய நல்லபொருளைக் கைப்படுத்திக் கொள்ள ஒருவன் விரும்பினால் அந்தச் செயல் அவனுடைய குடியையும் அழித்துப் பல குற்றங்களையும் அவனுக்குத் தரும்.

**2. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்**
**நடுவுஅன்மை நாணு பவர்.**

படுபயன் - பிறரது பயன்களை; வெஃகி - விரும்பி; பழிப்படுவ செய்யார்- பழி ஏற்படும் படியான செயல்களைச் செய்யமாட்டார்கள்; நடுவு அன்மை - நடுவு நிலைமை அல்லாத செயலுக்கு; நாணுபவர் - வெட்கி அஞ்சுபவர்கள்.

நடுவு நிலைமை அல்லாத செயலுக்கு வெட்கப்பட்டு அஞ்சுபவர்கள் பிறரது பயன்களை அடைய விரும்பிப் பழி ஏற்படும்படியான செயல்களைச் செய்யமாட்டார்கள்.

**3. சிற்றின்பம் வெஃகி அறன்அல்ல செய்யாரே**
**மற்றின்பம் வேண்டு பவர்.**

சிற்றின்பம் வெஃகி - பிறர்பொருளை அடைவதால் பெறும் சிறிதளவே இன்பத்தை விரும்பி; அறன் அல்ல - அறம்

அல்லாதவற்றை; செய்யாரே - செய்ய மாட்டார்கள்; மற்றின்பம் வேண்டுபவர் - அறத்தால் வரும் பேரின்பத்தை விரும்புகிறவர்கள்.

அறத்தால் வரும் பேரின்பத்தை விரும்புகிறவர்கள், பிறர்பொருளை அடைவதால் பெறும் சிறிதளவான இன்பத்தை விரும்பி அறம் அல்லாதவற்றைச் செய்யமாட்டார்கள்.

4. இலம் என்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மைஇல் காட்சி யவர்.

இலம் என்று - தம்மிடத்தில் பொருள் இல்லை என்று கருதி; வெஃகுதல் செய்யார் - பிறர் பொருளை விரும்ப மாட்டார்கள்; புலம் வென்ற - ஐம்புலன்களையும் வென்ற; புன்மை இல் காட்சியவர் - சிறுமையில்லாத காட்சியினை உடையவர்.

ஐம்புலன் உணர்வுகளை வென்ற சிறுமையில்லாத காட்சியினை உடையவர்கள், தம்மிடம் பொருள் இல்லை என்று கருதிப் பிறர் பொருளை விரும்பமாட்டார்கள்.

5. அஃகி அகன்ற அறிவுஎன்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

அஃகி - நுண்ணியதாய்; அகன்ற அறிவு - அகன்ற அறிவுடைய தாயும்; என்னாம் - என்ன பயன்?; யார்மாட்டும் - எல்லோரிடத்தும்; வெஃகி - அவர்தம் பொருள்களை விரும்பி; வெறிய செயின் - வெறுக்கத்தக்கன செய்தால்.

எல்லோரிடத்தும் அவர்தம் பொருள்களை விரும்பி வெறுக்கத் தக்கன செய்வராயின் நுண்ணிய அகன்ற அறிவுடைய தன்மையினால் என்ன பயன்?

6. அருள் வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

அருள்வெஃகி - அருளை விரும்பி; ஆற்றின்கண் நின்றான் - அதற்கான வழியில் நிற்பவன்; பொருள்வெஃகி - பிறர் பொருளை

விரும்பி; பொல்லாத சூழக் கெடும் - பொல்லாதனவற்றைச் செய்ய நினைத்தால் கெடுவான்.

அருளை விரும்பி அதற்கான வழியில் நிற்பவன் பிறர் பொருளை விரும்பி அதற்காகப் பொல்லாதவற்றைச் செய்ய நினைத்தால் கெடுவான்.

**7. வேண்டற்க வெஃகிஆம் ஆக்கம் விளைவயின்**
**மாண்டற்கு அரிதுஆம் பயன்.**

வேண்டற்க - விரும்ப வேண்டாம்; வெஃகிஆம் - பிறர்பொருளை விரும்பி அதனால் வரும்; ஆக்கம் - செல்வம்; விளைவயின் பயன் - அதனை அனுபவிப்பதால் உண்டாகும் பயன்; மாண்டற்கு - மாட்சிமை உடைமைக்கு; அரிது ஆம் - அரிதாகும்.

பிறர்பொருளை விரும்பி அதனால் கிடைக்கும் செல்வத்தை விரும்ப வேண்டாம் : ஏனெனில் அதனை அனுபவிப்பதால் உண்டாகும் பயன் மாட்சிமைக்கு உரியதில்லை.

**8. அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை**
**வேண்டும் பிறன்கைப் பொருள்.**

அஃகாமை - சுருங்குதல் இன்மை; செல்வத்திற்கு யாதெனின் - செல்வத்திற்கு எது வென்றால்; வெஃகாமை வேண்டும் - விரும்பாமை வேண்டும் ; பிறன்கைப் பொருள் - பிறருடைய கைப் பொருள்.

பிறருடைய கைப்பொருளை விரும்பாமை வேண்டும்; அதுவே ஒருவன் பெற்ற செல்வம் சுருங்காமைக்குக் காரணமாகும்.

**9. அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்**
**திறன்அறிந்து ஆங்கே திரு.**

அறன்அறிந்து - அறம் எதுவென அறிந்து ; வெஃகா - பிறர்பொருளை விரும்பாத; அறிவுடையார்ச் சேரும் - அறிவுடையவர்களைச் சேரும்; திறன் அறிந்து ஆங்கே திரு - செல்வம் அவர்திறனறிந்து அங்கே சேரும்.

அறம் எதுவென அறிந்து பிறர் பொருளை விரும்பாத அறிவுடையவர்களின் திறன் அறிந்து செல்வம் அவரிடத்தில் சேரும்.

10. இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
வேண்டாமை என்னும் செருக்கு.

இறல் - இறுதி; ஈனும் - தரும்; எண்ணாது வெஃகின் - ஆராயாது பிறர்பொருளை விரும்பினால்; விறல் ஈனும் - வெற்றியைத் தரும்; வேண்டாமை என்னும் செருக்கு - பிறர் பொருளை வேண்டாமை என்ற பெருமிதம்.

எதனையும் ஆராயாது பிறர்பொருளை விரும்பினால் அது இறுதியைத் தரும்; வேண்டாமை என்னும்பெருமிதம் வெற்றியைத் தரும்.

*(தொடரும்)...*

## மேன்மை கொள் மேகநாதன்

(மழைவேட்டல் தொடர்பான கட்டுரை)

- தமிழாகரர் தெ. முருகசாமி, புதுச்சேரி

உயிர்களின் தோற்றத்திற்கு நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற ஐந்தும் அடிப்படை மூலப் பொருள் (ELEMENTS)கள் ஆகும். இவற்றை ஐம்பூதங்கள் என்பர்.

பூதம் என்றால் அச்சமூட்டும் ஒருயிர் என்பதாகக் கூறினாலும் இயற்கை மூலங்களான மேற்படி ஐந்தும் தம்முள் மாறுபட்டால் அச்சமூட்டுவனவே ஆகும்.

நிலவெடிப்பு - பூகம்பம், நில நடுக்கமும் அதுவே. நீர் மிகுந்தால் ஆழிப் பேரலை. நெருப்பின் சீற்றம் எரிமலை, காற்றின் சீற்றம் சூறாவளி, ஆகாயத்தின் இயக்க மாறுபாடுகள் இடி மின்னல் தாக்கங்கள், இப்படியாக இயல்புக்கு மாறுபடுங்கால் அச்சமூட்டுவதானாலும் அழிப்புக்குரியதே அவற்றின் இயல் பல்ல என்பதை இதமாக உணர்த்துவதே பூதம் என்ற சொல்லாகும்.

பூத்தது, பூப்பது என்ற கருத்தில் பூ என்ற வேர்ச் சொல்லிலிருந்து கிளைத்தது தான் பூதம், அது பூமி அல்லது பூதலம் என்றும் புவனம் என்றும் பெயர் பெறும். எனவே தோன்றிய அளவிலேயே இல்லாமல்

புதுப்புது புதுமைகளைப் பூக்கக் காரணமாக இருப்பதால் பூதம் எனப்படும்.

பூமியின் இயக்கங்கள் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கின்றன. ஆதலால் மேற்படி ஐந்தும் தனித்தனியே காணப்பட்டாலும் அவை ஒன்றுக்குள் ஒன்று தொடர்புடையவை; அதனால் உலக வாழ்வு முரண்பாடில்லாத ஓர் அச்சில் சுழன்று கொண்டே இருக்கின்றது. இவை முரண்படுங்கால் வறட்சியின் கோரப்பிடியில் உலகம் சிக்குண்டு தவிக்கும். இவ்வுண்மையை அய்யன் திருவள்ளுவர் வான் சிறப்பு அதிகாரத்தில்.

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின் (17)

என்ற குறளால் உணர்த்தினார். மேகம் நீரைத் தாங்கிப் பெய்யா விடின் நெடுங்கடலும் தன் வளம் குன்றுமாம்.

மேகம் மழைபெய்யாமல் போவதற்கு ஆகாயத்தின் வெப்பச் சலனமே காரணம். ஈரப்பசை நீத்துப் போகும் போது மேகம் வறண்டு விடும்.

நீராவியின் பரிணாமப் பரிமாணமே மேகம். அது வறண்டு விடுங்கால் அதன்மீது குளிர்ந்த காற்று படின் மழைக்கூறு உருவாகும். நிலப்பகுதியில் உள்ள ஆறு, குளம், ஏரி முதலிய நீர் நிலைகள் ஆவியாகிவிட்ட நிலையிலும் வெப்பச் சலனக் காற்றே ஆகாயத்தின் வெண்மேகத்தைக் கலைக்கும். உலவும் காற்றால் தள்ளப்படும் மேகம் கடலை நோக்காமல் வெப்பத்தால் வறண்டு விட்டால் மழை பெய்யாது. அதுவே குளிர்ந்த ஈரப்பசையால் கடலை நோக்கினால் கடல் நீரை மொண்டு, கருத்து மழை பெய்யும்.

இந்த நிலைக்குக் காற்று, மேகத்திற்குத் துணை செய்ய, மரங்களின் அசைவுகள் மழை பெய்வதற்கான ஆதாரமாகிறது. இதனால் தான் மழையின்றி மாநிலத்தார்க்கில்லை என்றும் ஒரு சங்க நூல் கூறுகிறது. மழையே எல்லாமாய் உள்ளதாகவும் வள்ளுவர் கூறினார் (துப்பார்க்கு...குறள் 12).

ஆக மழையின்றி வறளும் சூழலால் மாநிலம் தவிக்கும் போது இன்றைய அறிவியல் கண்டுபிடிப்பால் ஆகாயத்தில் தூவப்படும் ஒருவகை ரசாயன வெள்ளுப்பால் (CHEMICAL SILVER NITRATE)மழையைத் தருவிக்கும் முயற்சி போல அந்தக் காலத்தில் பக்திப் பரிமாணக் கூட்டுப் பாடலால் மழையைத் தருவித்தனர்.

ஆகாயத்தில் தூவப்படும் ஒருவகை ரசாயன அமில வெள்ளுப்பால் மேகம் கலைக்கப்படும் போது பனிபடர்ந்து குளிர்ச்சியடையஅடைய மேகம் மழையைக் கொட்டுவது போல் கூட்டு வழிபாட்டின் இசைப் பெருக்கால் ஓசையை எழுப்பி மேகத்தின் இயக்கத்தைச் சலனப்டுத்தலாம் என்ற உண்மையை அனுபவ மாகத் தமிழ் மக்கள் உணர்ந்ததால் தான் மேகராகக் குறிஞ்சிப் பண்ணில், நீலாம்பரி ராகத்தில் பாடல் பாடி, மழையை வரவழைத்துள்ளனர்.

வறள் மேகமானது காற்று அல்லது ஓசைச் சலனங்களால் பூமிக்கு அருகில் சற்று உயரத்தில் தாழும்போது பூமியின் நீரை உறிஞ்சிய நீராவியானது ஆகாயத்திலும் மெல்லிதாக உள்ள (லேசாக) மேகப்படலத்தைத் தாக்கும் நிலையில் காற்றின் துணையும் சேர வெப்ப மண்டலம் குளிர்ச்சியடைந்து மழைக் கூறு பெறும். அப்போது மழை பெய்யும் வாய்ப்புண்டு. இது வான மண்டலத்தில் நிகழும் வெப்பம், காற்று, குளிர்மை (குளிர்ச்சி) போன்ற கூட்டுக் கலவையால் நிகழ்வது. இயற்கையான இந்நிகழ்விற்கு எங்கும் பரந்த பரம் பொருளே காரணம் என்ற நம்பிக்கையின் வலுவால்தான் இறைவனை வானாகி, மண்ணாகி வளியாகி ஒளியாகி என ஐம்பூதமாய்க் கண்டு தொழ நேர்ந்தது.

ஆக மேகத்தைச் சலனப் படுத்துவதால் மேகராகக் குறிஞ்சி எனப்பட்டது. மலையும் மலைசார்ந்ததுமான இடமே குறிஞ்சி; அது மேகம் வந்து எளிமையாய்த் தங்குதற்குரிய இடம், மரம் செடி கொடிகள் அடர்ந்த தாவரங்களின் அசைவால் மேகங்கள் சலனப்படும் வாய்ப்பால் அவ்வப்போது மழைபொழியும், இந்த இயற்கைக் கூறுதான் மேகராகக் குறிஞ்சிப் பண்ணில் ஒரோவழி அமைவதால் அது

மழைப்பாட்டு. மழைப்பண் என்ற குறியீட்டைப் பெற்றது எனலாம் இக்கருத்து ஓசை ஒலிப்பால் இசையால் பயிர்கள் வளர்வதாகக் கண்டறிந்த விஞ்ஞான மெய்ம்மைக்குப் பொருத்தமாகவே மேகத்தின் மழைக் கூறுக்கு இசையின் பங்களிப்பு ஆதாரமானதாகக் கண்டறியப்பட்டது. இதன் வெளிப்பாடாக அமைந்தது தான் திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்களில் அமைந்த ஆழி மழைக் கண்ணா, முன்னிக்கடலைச் சுருக்கி எனத் தொடங்கும் பாடல் களாகும்.

இதனால் மழையைச் சக்தியாக வழிபட்ட நிலை தெரிகிறது. மழை ஆற்றலே இறைத் தன்மையாக உணரப்பட்டதால் மாரியம்மை, மாரியாத்தாள், செல்லாயி, செல்லாத்தாள் என்றெல்லாம் மழைத் தெய்வத்தைப் பெயரிட்டு அழைத்தனர். இக்கூட்டு வழிபாட்டின் முறையைச் சிலப்பதிகாரத்தில் மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும் என்பதாக இளங்கோவடிகள் தாம் தனிப்பட்ட முறையாய்ப் பாடி வணங்கு வதாகப் பாடாமல் கூட்டுக்குரலாய் (CHORUS) இசைத்துள்ளது மேகராகத்துளிர்ப் பாகக் கருதலாமன்றோ!

செல்-மேகம், ஆய்-தாய், எனப் பெண் சக்தியாக மேகத்தை வழிபட்டதைப் போலவே ஆண்சத்தியையும் செல்லீசன், மேகநாதன் என ஈசனைப் போற்றிப் பரவிய தேவாரச் சான்றுகளும் உள்ளன.

கொங்கு நாட்டுத் திருத்தலத்தில் அந்தியூர்த் தலமும் ஒன்று. ஈரோட்டிலிருந்து 35கி.மீ தூரத்தில் உள்ளது இச் சிவாலயம். இச்சிவாலயக் கல்வெட்டில் (13, 15ஆம் நூற்றாண்டு) அந்தியூர் உடையார் செல்லீசுவர் எனக்குறிப்பிடப்பட்டுள்ளது. பாடல் பெற்ற தலமாக இல்லையானாலும் கல்வெட்டுள்ள குறிப்பால் செல்லீசுவரி உடனமர் செல்லீசுவரர் என்ற பெயரைச் சக்திக்கும் சிவனுக்குமாக உள்ளதை மேகத்தோடு தொடர்புபடுத்தி உணரவாய்ப்பாக உள்ளது. இந்த அந்தியூரைச் சார்ந்த இளங்கீரனார் என்னும் புலவரை அந்தி இளங்கீரனார் என அகநானூறு (71) அறிமுகப்படுத்துவதால் அந்தியூர் பழம் பெருமை வாய்ந்தது என்பதும் மக்கள் மழை வேண்டிப் பூசித்ததால் இறைவன் இறைவிக்கு மேகத் தொடர்பாகவே பெயர்கள் அமைந்ததாகவும் உணரலாம்.

அப்பர் பெருமான் பாடிய பொதுவான தாண்டகம் ஒன்றில் காற்றாகிக் கார்முகிலாய்க் காலம் மூன்றாய் எனப் பாடியுள்ளதால் இறைவன் மேகமாக உள்ள சிறப்பு தெரிகிறது.

மேலும் திருமீயச்சூர் இளங்கோயில் என்னும் தேவாரத் திருத்தலத்து இறைவிக்கு மேகலாம்பாள் என்ற ஒரு பெயர் இருந்ததாக அபிதான சிந்தாமணி என்ற நூலின் திருத்தலங்கள் பற்றிய விவர வரிசையில் குறிப்பு உள்ளதால் அத்தலத்தின் இறைவன் மேகநாதராகக் கொண்டாடப்பட்டார் எனத் தெரிகிறது. இதனால் மேக இயக்கமானது இறைவனின் கட்டுப்பாட்டால் உள்ள உண்மை வெளிப்படுமாறு திருவிளையாடல் புராணத்தாலும் உணரலாம்.

வருணன் தான் சீற்றத்தால் மதுரையை அடாத மழையால் வாட்டினான், பாண்டியன் ஆலவாய் அண்ணலிடம் முறையிட, அவர் மதுரையை மழையிலிருந்து காக்கத் தன் சடாமுடியிலிருந்த நான்கு மேகங்களை அனுப்பி மதுரையின் நாலாப் புறத்திலும் சூழ்ந்து வருணனின் மழைமேகத்தைக் கட்டுப்படுத்தியதாகப் பரஞ்சோதி முனிவர் கூறுகிறார். எனவே இறைவனின் ஏவலால் தான் மேகங்கள் மழை பொழிகின்றன எனத் தெரிகிறது. இதற்கு மேலும் ஒரு சான்றாகச் சுந்தரர் திருப்புன்கூரில் பாடிய தேவாரமும் பெருஞ்சிறப்பாய் உள்ளது.

*வையகம் முற்றும் மாமழை மறந்து*
*வயலில் நீரிலை மாநிலம் தருகோம்*
*உய்யக் கொள்க மற்று எங்களை என்ன*
*ஒளிகொள்க மற்று எங்களை என்ன*
*பெய்யும் மாமழைப் பெரு வெள்ளம் தவிர்த்துப்*
*பெயர்த்தும் பன்னிரு வேலி கொண்டு அருளும்*

என்றபடித் தமிழகத்தில் ஏற்பட்டுள்ள தற்போதைய நீரில்லா நிலையைப் போக்கி நீர்நிலை நிறைய எல்லாம் வல்ல வான்மேக நாதனை வணங்கி வழிபடுவோமாக! வான்முகில் வழாது பெய்க! வணக்கம் நன்றி!

# மடாலய நிகழ்வுகள்

## கோவிலூர் மடாலயத்தில் செட்டிநாட்டுத் தாலாட்டுப்பாடல் படப்பிடிப்புச் செய்தி

செட்டிநாட்டில் குறிப்பாக நகரத்தார்கள் தமிழை வளர்ப்பதில் பெரும்பங்கு ஆற்றியுள்ளனர். கவிதை பாடுவதில் ஆண்களுக்கு இணையாகப் பெண்களும் திறமை படைத்தவர்களாகத் திகழ்ந்தனர். இயல்பாகவே பெண்கள் தாலாட்டு மற்றும் ஒப்பாரிப் பாடல்களைச் சொந்தமாக இயற்றிப் பாடுபவர்களாக இருந்தனர். இப்பாடல்களில் குடும்ப நிகழ்வுகள், உறவுகள், நாட்டு நடப்பு, தெய்வ வழிபாடு, அரசர் ஆட்சி, சுதந்திரப்போராட்டம், வியாபாரம், இயற்கை வளங்கள் ஆகியவற்றைக் கற்பனை கலந்து பாடியுள்ளனர். இப்பாடல்கள் மூலம் அன்றைய பண்பாடு, பழக்க வழக்கங்கள் மற்றும் நாட்டு நிகழ்வுகளை அறிந்து கொள்ளும் வரலாற்று ஆவணங்களாக இவை திகழ்கின்றன. வயதான சில ஆச்சிமார்கள் பாடும் திறமையுள்ளவர்களாக இன்றும் உள்ளனர். தாலாட்டு, ஒப்பாரிப் பாடல்கள் அழிந்துவிடாமல் அவற்றை ஆவணப்படுத்தும் முயற்சியாக இப்பாடல்கள் பாடத்தெரிந்த 14 ஊர்களைச் சார்ந்த 24 ஆச்சிமார்களைக் கண்டறிந்து கோவிலூர் மடாலயத்திற்கு அழைத்து வந்து அவர்களைப் பாடச்செய்து படமாக்கப்பட்டது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் நிகழ்ச்சியைத் தொடங்கி வைத்தார். கலை அறிவியல் கல்லூரி தகவல் ஊடகத்துறைத் தலைவர் ராமசாமி தலைமையில் இத்துறை மாணவர்கள் ஒலிப்பதிவு மற்றும் ஒளிப்பதிவினைச் செய்தனர். ஆச்சிமார்களைப் பாடச் செய்து படமாக்கப்பட்டது. படப்பிடிப்பிற்கான ஏற்பாடுகளை நபார்டு கண்ணப்பன், கோவிலூர் மடாலய மக்கள் தொடர்பு அலுவலர் குமரப்பன் ஆகியோர் செய்திருந்தனர்.

29.04.2017 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் கழறிற்றறிவார் புராணம் பற்றிப் புலவர் ஆறு. மெய்யாண்டவர் சொற்பொழிவாற்றினார்.

## கோவிலூர் மடாலயத்தில் வேதாந்தவகுப்புகள் துவக்கவிழா (2.05.2017 - 6.05.2017)

கோவிலூர் மடாலயம் வேதாந்தத்தைக் கற்பிப்பதற்காக

1808ல் முத்துராமலிங்க ஆண்டவரால் துவக்கப்பெற்றது. அக்காலக் கட்டத்தில் ஒருகுறிப்பிட்ட சமூகத்தினரே வேதாந்தம் பயில இயலும். எனவே விரும்பிய அனைவரும் வேதாந்தம் பயிலுவதற்காக ஒருபாடத்திட்டத்தினை வகுத்து 16 நூல்களை வெளியிட்டது. இந்நூல்கள் பெரும்பான்மையோரால் ஏற்றுக்கொள்ளப்பட்டுக் கோவிலூர் மடாலயப்பாடத்திட்டம் எனப் பெயரிட்டு இந்தியாவில் பல இடங்களில் கற்பிக்கப் பெற்றுவந்தன. இவ்வேதாந்த நூல்களில் ஒன்றான சசிவன்னபோதம் கோவிலூரில் கற்பிக்கப்பட்டு வருகிறது. தமிழக அளவிலான சசிவன்னபோதம் நூலைக்கற்பிக்கும் வகுப்பு கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் மற்றும் சில வேதாந்திகள் வகுப்புகளை எடுத்து வருகிறார்கள். ஒருவார காலம் நடைபெற்ற உண்டு உறைவிட வகுப்புகளில் தமிழகம் முழுவதுமிருந்து வந்த 48 பேர் பங்குபெற்றனர்.

## நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் பணிநியமன ஆணை வழங்கும் விழா

17.05.2017 அன்று கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் இறுதி ஆண்டு பயிலும் மாணவர்களுக்குத் தமிழ்நாட்டின் முன்னணித் தொழில் நிறுவனங்கள் பல கட்டங்களாக வளாகத் தேர்வு நடத்தி அவர்கள் நிறுவனங்களுக்குப் பணியாளர்களைத் தேர்வு செய்தனர். இவ்வாறு வளாகத் தேர்வில் தேர்வு செய்யப்பெற்ற 260 மாணவர்களுக்கான பணிநியமன ஆணை வழங்கும் விழா நடைபெற்றது. கல்லூரி முதல்வர் மாயாண்டி வரவேற்றார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் மாணவர்களுக்கான பணி நியமன ஆணையை வழங்கி ஆசி கூறினார்கள். கோவிலூர் மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் மாணவர்களை வாழ்த்திப் பேசினார். பேரா. சண்முகநாதன் நன்றி கூறினார்.

எல் அண்ட்டி, ப்ரேக்ஸ இண்டியா, இந்தியா நிப்பான் (பி)லிட், அவலான் டெக்னாலஜிஸ், ஹைமெக்சி என்சி, வீடா இண்டஸ்ட்ரீஸ்,குன்ஏரோஸ்யேஸ், பெர்சி காம்சி.என்.சி., என்.எஸ்.சே.ஆடோமேடிவ், எல் அன்ட் பி, விஜய் என்டர்பிரைசஸ்,

ஆகிய நிறுவனங்கள் சிவில் பிரிவில் 50, பொறியியல் பிரிவில் 115, டிரிபிள் இ பிரிவில் 61, இ.சி.இ பிரிவில் 34 என 260 மாணவர்களைப் பணிக்குத் தேர்வு செய்துள்ளன. தற்போது 95 சதவீத மாணவர்களுக்கு பணிநியமனம் கிடைப்பதற்கு உதவிபுரிந்த முதல்வர் ஆசிரியர்களுக்குப் பாராட்டுத் தெரிவிக்கப் பெற்றது.

### கோவிலூர் மடாலயத்திற்கு சிருங்கேரி சங்கராச்சாரியார்கள் வருகை

சிருங்கேரி ஸ்ரீசாரதாபீடம் சங்கராச்சார்ய சுவாமிகள் ஜகத்குரு பாரதீர்த்த மகா சுவாமிகள் அவர்களும் விதுசேகர பாரதிசுவாமிகள் அவர்களும் கோவிலூர் மடாலயத்திற்கு 14.05.2017 ஞாயிற்றுக் கிழமையன்று வருகை தந்தார்கள். அன்று குருமகா சன்னிதானம் பாரத தீர்த்த மகாசுவாமிகள் அமிர்தஹஸ்தத்தால் சாரதாசந்திர மௌளீஸ்வரர் பூஜை செய்தார்கள். இரவு கோவிலூர் மடத்தில் தங்கினார்கள். 15.05.2017 திங்கட்கிழமை காலை 7.00 மணி முதல் சிறப்பு பூசைகள் சங்கராச்சாரியர்களால் நடத்தப்பெறற்றன. 10.30 மணிக்கு மகாசங்கராச்சாரிய சுவாமிகள் அருள் உரை ஆற்றினார். அதனைத் தொடர்ந்து பக்தர்களுக்கும் பொதுமக்களுக்கும் 12.00 மணி வரை தரிசனம் அளித்து அருளாசி வழங்கினார். சங்கராச்சாரியார் வருகையை முன்னிட்டு சிருங்கேரி சங்கராச்சாரியார்கள் அவருடன் வரும் குழுவினர் தங்குவதற்கு பூசைகள் செய்வதற்கு பொதுமக்கள் தரிசனத்திற்கு கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் தலைமையில் விரிவான ஏற்பாடுகள் செய்யப்பட்டன வருகின்றன. மேலும் பொதுமக்களை நெறிப்படுத்த ஆசிரியர்களும் தொண்டர்களும் நியமிக்கப்பட்டனர். பொதுமக்கள் காலை மணி 10.30 - 12.00 மணி வரை சங்கராச்சாரியார்களைத் தரிசனம் செய்தனர்.

கோவிலூர் மடாலயத்திற்கும் சிருங்கேரி சாரதா பீடத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. 1908, 1910, 1930, 1980, 1987ம் ஆண்டுகளில் சிருங்கேரி சங்கராச்சார்யர்கள் வருகை புரிந்துள்ளனர்.

1978 ஆண்டிற்குப் பிறகு இப்பொழுது 2017ல் வருகை தந்தனர். 1910ம் ஆண்டு கோவிலூரில் உள்ள கொற்றவாளீஸ்வரர் திருநெல்லை அம்மன் கோவிலைத் திருப்பணி செய்து குடமுழுக்குச் செய்த போது கோவிலூர் ஆதீனம் வீரப்பசாமி அழைப்பினை ஏற்று குடமுழுக்கு விழாவில் சாரதா பீடம் சங்கராச்சாரியார் கலந்து கொண்டார்கள். கோவில் கட்டுமான சிலைகள் சாரதா பீடத்தில் கட்டித்தருமாறு வேண்டுகோளை ஏற்று சிருங்கேரியில் உள்ள சாரதா பீடத்தில் சாரதாம்பாள் சந்நிதியினை வீரப்பசாமிகள் கட்டி வழங்கினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

## வரவேற்புப் பாமாலை

14.05.2017 அன்று நம் திருமடத்திற்கு எழுந்தருளிய சிருங்கேரி
ஜகத்குரு சங்கராச்சாரியார் ஸ்ரீஸ்ரீ பாரதீ தீர்த்த மகா சந்நிதானம்
மற்றும் ஜகத்குரு ஸ்ரீஸ்ரீவிதுசேகரா பாரதீ சந்நிதானம்
ஆகியோருக்கு வாசித்து அளிக்கப் பெற்ற வரவேற்புப் பாமாலை

சிருங்கேரி மடத்திற்கும் கோவி லூர்க்கும்
சிறந்தொரு தொடர்புண்டு : உகந்த லிங்கப்
பெரும்ஞான சுவாமிகள்பால் பாடம் கேட்டுப்
பெரும்ஞானி ஆனார்முக்தி ராம லிங்கர்;
குருஞான பீடம்எனக் கோவி லூரார்
கொண்டாடும் சிருங்கேரி : வேதாந் தத்தை
அருள்நூலாய்க் கொண்டிங்கே பாட மாக
ஆச்சார்யர் வழிநின்று போற்று கின்றோம்!

யாத்திரைகள் வரும்போதில் ஆச்சார் யார்கள்
நமைமறவா நிலைகொண்டு வருவ துண்டு
சாத்திரத்தின் முறைப்படியே பணிந்து போற்றித்
தங்கவைத்து மரியாதை செய்வ துண்டு
பூத்தூவி நிறைகுடத்தால் பூஜை செய்து
புனிதமிகு பிரமசபை வழிபாடு உண்டு
ஏத்துகிற வேதாந்தம் உபநி ஷத்தை
எழுதிவைத்துப் பாடம்எனப் படிக்கின் றோம்நாம்;

குடமுழுக்கு விழாக்களுக்கு ஆச்சார் யார்கள்
கூடிவந்து வாழ்த்தினரே : கோவி லூரார்
உடமையெனக் கொண்டாடும் வேதாந் தங்கள்
உயர்கல்விப் பாடமெனக்கொண்டுள் ளோமே;
கொடைஎன்று நாச்சியப்பர் கொடுத்த தாலே
கொலுவைக்கும் நவராத்திரிக் காலம் தன்னில்
இடம்கொடுத்து வழிபாட்டை நிகழ்த்து கின்ற
ஏற்றம்மிகு சிருங்கேரி வணங்கி நின்றோம்!

சீர்வளரும் சிருங்கேரி பீடம் தன்னில்
தெய்வமாய்க் காட்சிதரும் ஆச்சார் யார்கள்
கார்பொழியப் பயிர்விளையும் கழனி ஊரில்
காலடியை எடுத்துவைத்துக் கருணை செய்யப்
பேர்பெற்ற கோவிலூர் வருகை தந்தீர்!
பேரன்பு நிறைவோடு பெற்ற தாயின்
மார்பொன்று கன்றினைப்போல் மகிழ்ந்து போற்றி
வரவேற்றோம்! அருள்தந்து வாழ்த்து வீரே!

கோவிலூர் ஆதீனம்,
**சீர் வளர்சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### உக்கிரபாண்டியனுக்கு வேல் வளை செண்டு கொடுத்தது

உக்கிர குமாரருக்குத் திருமணம் செய்யக் கருதியுள்ளார் சுந்தரபாண்டியர் என்பதை உணர்ந்த மந்திரியர் மூதறிஞரோடு கூடி ஆராய்ந்தனர். விலத்திரு சீரிய மரபு, உயர்குடிப் பிறப்பு, கீர்த்தி ஆனவற்றால் தம் அரசரிடம் சம்பந்தம் செய்யப் பொருத்தமும் தகுதியும் உள்ளவர் யார் என்பதைத் தேர்ந்தனர். முடிவாக வட நாட்டின் கண்ணே கல்யாணபுரம் என்ற பேரூரின் வேந்தனும் சூரியகுலத் தோன்றலுமாகிய சோம சேகரன் என்பவரிடத்துத் தோன்றிய காந்திமதி என்ற கன்னியாரத்தினமே தகுதி என்று தெளிந்தனர்.

மதுரையம்பதியிலே மதிமந்திரியும் மூதறிஞரும் ஆராய்ந்து தெளிந்த அதே இரவிலே கல்யாணபுரச் சோமசேகரன் திவ்யமான கனவு கண்டான். கனவினிலே சிவபெருமான் எழுந்தருளி, நராதிப ! யாம் மதுரைச் சொக்கநாதர், நின்திருமகளாம் வடிவணங்கைச் சுந்தரபாண்டியன் திருக்குமாரன் உக்கிரனுக்குத் திருமணம் செய்து வைப்பாயாக என்று கூறிமறைந்தருளினார். அம் மாதேவ மொழி கேட்ட சோமசேகரனின் உள்ளமும் முகமும் மலர்ந்து காட்டின. விழித் தெழுந்து கரங்குவித்துச் சிவபெருமானின் அருளின் எளிமையை எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்தான்.

விடிந்ததும் தனது திருமகளுடனும் அமைச்சர்களுடனும், சேனைகள் சூழ மதுரை நகரை நோக்கி புறப்பட்டான்.

சுந்தரபாண்டியனின் உறவினரோடு அமைச்சர்களும் கல்யாணபுரம் நோக்கிப் புறப்பட்டுவிட்டனர் திருமணம் பேச ! இருபுறத்தாரும் இடைவழியிலே சந்தித்துக் கொண்டனர். மதுரைக்காரர் சோமசேகரனைக் கண்டு, முருகப்பெருமானை நிகர்த்த எங்கள் உக்கிர குமாரருக்கு உங்கள் புதல்வியைத் திருமணம் செய்து தருவிராக என்றனர். அதுகேட்டுப் பெருமகிழ்வுற்ற சோமசேகரனும் தான் கண்ட இன்பக் கனவினை நவின்று உடனே உடன்பாடு தெரிவித்தான். இந்த நல்விஷயத்தை முன்னர் சென்று அறிவிக்கத் தூதர்கள் மதுரை நோக்கி விரைந்தனர்.

பின்னர் அனைவரும் மதுரை வந்தடைந்தனர். சூரிய குலத்தோன்றலான சோமசேகரன் சந்திரகுலத்தோன்றலான சுந்தரபாண்டியப் பெருமானை எதிர் சென்று பணிந்தான். சுந்தரர் சோமனைத் தழுவிக் கொண்ட பின் அழகுப் பெருமனை யொன்றிலே தங்குமாறு அனுப்பினார்.

திருமண நன்னாள் கணிக்கப் பெற்றது. மன்னர் கட்கெல்லாம் ஓலைகள் பறந்தன. திருமண விழாச் செய்தியை ஊரெங்கும் மணமுரசு அறைந்து சொல்லியது. கமுகு, வாழை, முளைப்பாலிகை, நீர்நிறை, பொற்குடம், தோரணம், கொடி முதலியன பொருந்தி வீடுகளும் வீதிகளும் வண்ணக்கோலம் பூண்டன. ஏற்கெனவே பொலிவு கொண்ட

மதுராபுரி பன்மடங்கு பொலிவு கொண்டது. சுந்தரபாண்டியனாரின் ஸ்ரீமுகம் பெற்ற வேற்று நாட்டு வேந்தர்கள், முனிவர் ஆகியோர் திருமணம் காண வந்தனர். சோழவேந்தன், கஜபதி, துரகபதி, நரபதி எல்லாரும் வந்தனர். சீனர் முதல் சாவகர் ஈறாக அயல் நாட்டு மன்னர்களும் வந்தனர். சைவத் தவமுனிவோரும், ஐவகைச் சைவரும், அறுவகைச் சமயத்தோரும் வந்தனர். மகாவிஷ்ணு, பிரம்மா, இந்திரன் முதலிட்ட தேவரும், பதினெட்டு கணத்தார்களும் வந்தனர். வந்தோர் அனைவரும் தடாதகைப் பிராட்டியாரையும் சுந்தரபாண்டியரையும் தரிசனம் செய்து வணங்கினர். சுந்தரபாண்டியரும் வந்த அனைவரையும் தக்கபடி ஏற்றுச் சிறப்புச் செய்தார்.

சோமசேகரனின் அரும்புதல்வி காந்திமதியின் எழிலினைக் கண்டு சுந்தரபாண்டியர் வியந்தார். அவர்வியந்து மகிழும் பாங்கினை உணர்ந்த வியாழபகவான் சாமுத்திரிகா லக்ஷணத்தின்படி ஆராய்ந்து அங்குள்ளோர் யாவருக்கும் மங்கை நல்லாள் வடிவணங்கின் தன்மையைத் தெரிவித்து மகிழ்ந்தார். காந்திமதிக்கு ஒப்பான நங்கை எங்குமேயில்லை என்று தெரிந்தவர் எல்லாம் உளம் பூரித்தனர்.

திருமண நன்னாள் வந்துற்றது. உக்கிர குமாரர் அஷ்டமங்கலங்கள் சிறக்க யானையின் மீது கொணரப் பெற்ற வையை நீரிலே ஆடினார். திருமணக்கோலம் புனைந்தார். சங்கங்கள் முழங்க மணப்பொன் தவிசில் அமர்ந்தார். மணப்பெண் காந்திமதி திருமணக்கோலம் துலங்கக் குமாரரின் வலப்புறம் இடம் கொண்டார். காந்திமதியின் கரத்தினை ஏந்தி உக்கிர குமாரரின் கரத்தோடு பொருத்தித்தேவர் அரிய வேதமந்திரம் இயம்பித்தாரை வார்த்துக் கொடுத்தார். அதன் பின்னர் ஏராளமான பெருஞ்சிறப்புற்ற பொருள்களைச் சீர் வரிசைகளாக்கி ஸ்ரீதனமாகக் கொடுத்தார். பல்லியம் இயம்பின. தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். வேதகீதநாதம் எங்கும் பரவியது. நல்லோரையில் உக்கிரகுமாரர் காந்திமதிக்கு மாங்கல்யதாரணம் செய்து திருமண வினைகள் ஆற்றினார்.

திருக்கல்யாண ஊர்வலம் மிகவும் சிறப்பாக ஆடல் பாடல்களுடன் இனிது நடந்தேறியது. நகர் வலம் வந்து உக்கிரகுமாரர் தமது தேவியாரோடு இம்மையில் நன்மை தருவாரையும், சோமசுந்தர கடவுளையும் மீனாட்சியம்மையையும் தரிசித்து அரண்மனையை அடைந்தார். தம் பெற்றோரை வணங்கி எழுந்தார். பின்னர் வந்திருந்த அனைவரையும் தக்கபடி உபசரித்து விடையளித்தனுப்பினார்.

நல்லாட்சி புரிந்து வருகின்ற காலம் ஒரு நாள் சுந்தரபாண்டியர் தனது குமாரபாண்டியனை விளித்து மைந்தா ! தேவேந்திரனும் கடல்வேந்தனும் உனக்குப் பெரிய பகைவர்கள். மகாமேரு மலை செருக்குற்று நிற்கிறது. ஆதலால் நீ இந்திரனது முடி சிதறுமாறு இந்த வளையினைக் கொண்டு எறிதல் வேண்டும்; கடல் வற்றிடும்படி இந்த வேலை விடல் வேண்டும்; மேருவின் தருக்கு தகறும் வகையில் இந்தச் செண்டு கொண்டு அடித்தல் வேண்டும் என்று மொழி பகன்று வளை, வேல், செண்டு ஆன மூன்று ஆயுதங்களையும் ஈந்தருளினார். தந்தையாரைத் தொழுது முக்கலங்களையும் பெற்றுக் கொண்டார் உக்கிரகுமாரர். பின்பு சுந்தரபாண்டியர் வேதகோஷமும் பல்லியங்களும் ஒலிக்க, தன் குமாரனுக்கு முடிசூட்டி உக்கிரபாண்டிய மன்னர் என்றாக்கினார். தமது ஆனையையும், அரசுரிமையையும் செங்கோலையும் குமாரனுக்கு அருளி, நெடுங்காலம் நீயும் தருமமார்க்கத்திலே, சத்திய மார்க்கத்திலே ஒழுகிச் செங்கோல் செலுத்துவாயாக என்று வாழ்த்துரை அருளினார்.

அது சமயம் சிவகணத்தார் தமது பழைய வடிவங்களைப் பெற்றனர். சுந்தரபாண்டியப் பெருமான் தடாதகை தேவியாரோடு திருக்கோயில் சென்று எழுந்தருளியிருந்தார்.

உக்கிரகுமாரப் பெருவழுதி-நான்மறை அறங்கள் ஓங்க, நற்றவம் வேள்விமல்க, குறைவிலாது உயிர்கள் வாழ, மழைவளம் சுரக்க, மேன்மைகொள் சைவநீதி, உலகமெலாம் விளங்க, கோன்முறை அரசு செய்து வாழ்ந்து கொண்டிருந்தார்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்